# இயலிசை

தனி பிரதி விலை 0-50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை - 24

மலர் 2 15 - 1 - 84 இசைக்கலை தமிழ் மாதமிருமுறை - பொங்கல் இதழ் இதழ் 17/18


## இசைச் சித்தருக்கு இந்திய விருது !

### புதுடெல்லி சங்கீத நாடக அகடமி விருதுகள்



வருடா வருடம் இந்திய நாடெங்கும் உள்ள சிறந்த கலைஞர்களைத் தேர்ந்தெடுத்து பரிசுகள் வழங்கும் புதுடெல்லி சங்கீத நாடக அகடமி இவ்வருடம் 19 கலைஞர்களைத் தேர்ந்தெடுத்துள்ளது. தமிழகத்தைச் சார்ந்த இசைச்சித்தர் சிதம்பரம் S. ஜெயராமன், D. K. ஜெயராமன்-இசை, டாக்டர் பத்மா சுப்ரமணியம்-நடனம், பாலக்காடு ரகு-மிருதங்கம் ஆகியோர் அதில் இடம் பெற்றுள்ளனர்.

சிதம்பரம் S. ஜெயராமன் பெரும் இசைப் பரம்பரையில் வந்தவர். பல தமிழ் திரைப்படங்களில் பாடியவர். ஏராள மேடைக் கச்சேரிகள் செய்து தமிழிசையை வளர்த்தவர். இசை உலகில் இவர் ஓர் இராவணேஸ்வரன். இவருக்கு எண்ணிறந்த ரசிகர்கள் தமிழகத்திலும் தமிழர்கள் வாழும் இடங்கள் அனைத்திலும் உண்டு. தற்பொழுது தமிழக அரசு இசைக் கல்லூரிகள் இயக்குநராகவும், தென் மண்டல வானொலி தேர்வுக் குழு உறுப்பினராகவும் பணியாற்றி வருகின்றார்.

D. K. ஜெயராமன் பிரபல இசைக்கலைஞர் D.K. பட்டம்மாளின் சகோதரர். கர்நாடக இசை உலகில் முன்னணியில் நிற்கும் ஓர் இசைக் கலைஞர். இவ்வாண்டு 'கலைமாமணி' விருதும் பெறுகின்றார். ஏராள மாணவ-மாணவிகள் உள்ளனர்.

மறைந்த பிரபல திரை இயக்குநர் சுப்ரமணியத்தின் மகள் பத்மா சுப்ரமணியம். இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் ஏராள நடன நிகழ்ச்சிகள் நடத்தியவர். நடனக் கலைபற்றி ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றவர். சென்னை அடையாறில் 'நிருத்யோதயா' என்ற நடனப் பள்ளியை நடத்தி வருகின்றார்.

பிரபல இசைக் கலைஞர்கள் அனைவருக்கும் வாசித்து மிருதங்க உலகில் பிரபலமாக இருப்பவர் பாலக்காடு ரகு. வெளிநாடு சென்று வந்துள்ளார்.

இவர்களுக்கு ரூ. 10,000/- பணமும் தாமிர பட்டயமும் வரும் 84 மார்ச்சு மாதம் புது டெல்லியில் நடைபெறும் விழாவில் இந்தியக் குடியரசு தலைவர் வழங்குவார்.

## வடபழநியாண்டவர் திருக்கோவில்

### குடமுழுக்கு கலை நிகழ்ச்சிகள்



சென்னை வடபழநியில் உள்ள அருள்மிகு வடபழநியாண்டவர் கோவில் குடமுழுக்கு விழா 6-2-84 திங்கள் காலை 7 மணிக்கு நடைபெற உள்ளது. இதற்கு நாமகிரிப் பேட்டை K. கிருஷ்ணன் குழுவினர் நாதசுரம் வாசிக்க உள்ளனர். பின் கண்ட கலை நிகழ்ச்சிகள் தினசரி மாலையில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

ஜனவரி 31 கங்கை அமரன் குழுவினர் மெல்லிசை

பிப்ரவரி

1. K. வீரமணி குழுவினர் மெல்லிசை.
2. குன்னக்குடி வைத்யநாதன் குழுவினர் வயலின்.
3. MS. விசுவநாதன் குழுவினர் மெல்லிசை.
4. மதுரை S. சோமசுந்தரம் குழுவினர்.
5. சங்கர்-கணேஷ் குழுவினர் மலேசியா வாசுதேவன் குழுவினர்
6. சீர்காழி S. கோவிந்தராசன் சீர்காழி G. சிவசிதம்பரம் குழுவினர்.

தருமபுரம் P. சுவாமிநாதன், லால்குடி M. சுவாமிநாதன் வடபழநி N. ஆறுமுகம், அ. வேலாயுதம் ஆகிய ஓதுவார்கள் தேவார பாராயணம் தினசரி நடத்துவர்.

நிர்வாக அதிகாரி S. கோலப்பன் B.A. ஆலயதக்கார் A.N. சீனிவாசராவ் B.E. குடமுழுக்கு, கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடுகளைச் செய்துள்ளனர்.

## பித்துகுளி முருகதாசுக்கு 'கலைமாமணி'

### 1983-84 வருட தமிழக அரசு விருதுகள் !



தமிழக அரசின் இயல் இசை நாடக மன்றம் ஆண்டு தோறும் சிறந்த கலைஞர்களை தேர்ந்தெடுத்து 'கலைமாமணி' பட்டம் வழங்குகின்றது. இவ்வாண்டு 27 பேர்களுக்கு கலைமாமணி பட்டத்தின் 26-1-84 அன்று சென்னை கலைவாணர் அரங்கத்தில் நடைபெறும் விழாவில் வழங்குகின்றனர்.

அன்று விருதுபெறும் இசைக் கலைஞர்கள்:

L. R. ஈஸ்வரி - திரைப்பட இசை
D. K. ஜெயராமன் - இசை
வி. தியாகராாசன் - வயலின்
T. R. சீனுவாசன் - மிருதங்கம்
ஈ. காயத்ரி - வீணை
கோட்டூர் N. ராசரத்தினம்
N. வீராசாமி- நாதசுரம்
தென்சித்தூர் S. N. சுந்தரம் -
பித்துகுளி முருகதாசு தவில்
S. நமச்சிவாய ஓதுவார்-
இறையருள் பாடல்கள்
K.R. ராதாகிருஷ்ணன் -
பரதநாட்டிய ஆசிரியர்
மாலதி டாம்னிக் பரதநாட்டியம்
சின்னப்பா - வில்லிசை

M. R. கமலவேணி - நாடக
ஆர்மோனியம்

இவ்வாண்டு கீழ்க்கண்ட மறைந்த கலைஞர்கள் படம் திறந்து வைக்கப்படுகின்றது.

M. M. மாரியப்பா -
இசை நாடக நடிகர்
திருவனந்தபுரம் லட்சுமணப்பிள்ளை
பாடலாசிரியர்
யி. கே. அருணசல அண்ணாவி-
இசைக் கலைஞர்
பழனி சுப்பிரமணிய பிள்ளை-
மிருதங்கம்
செம்பன்னார் கோவில்
கோவிந்தசாமி தட்சிணாமூர்த்தி-
நாதசுரம்
திருமுல்லைவாயல்
முத்துவீருப்பபிள்ளை - தவில்
திருவிடைமருதூர்
குப்பையாபிள்ளை-பரதநாட்டியம்
திருக்கழுகுன்றம் துரைசாமி
நட்டுவனார்

சென்னை கச்சாலீசுவரர் கான சபையும் விருது பெறுகின்றது.

## வயதான கலைஞர்களுக்கு உதவி மான்யம்

### இயல் இசை நாடக மன்ற அறிவிப்பு !

கலைத்துறையில் (இசை, நாட்டியம், நாடகம் இசைக் கருவிகள், கிராமிய கலைகள்) குறிப்படத் தக்கவாறு சிறப்பு பணியாற்றி தற்போது வருமானம் இன்றி வறுமையில் உள்ள 58வயதுக்கு மேற்பட்ட கலைஞர்களுக்கு மாநில அரசு உதவி வருகின்றது. இவ்வருடம் இத்திட்டத்தின் கீழ் மானியம் பெற விரும்புபவர்கள் இதற்கான விண்ணப்பங்களைப் பெற 'செயலாளர், தமிழ் நாடு இயல் இசை நாடக மன்றம், சென்னை .28' என்ற விலாசத்திற்கு எழுதிப் பெறலாம். அவ்விண்ணப்பங்களை பூர்த்தி செய்து 31-3-84 தேதிக்குள் மன்றத்திற்கு திருப்பி அனுப்ப வேண்டும். ஏற்கனவே உதவி மான்யம் பெற்று வருபவர்கள் விண்ணப்பிக்க வேண்டிய அவசியம் இல்லை. 1982, 1983 ஆகிய ஆண்டுகளில் விண்ணப்பித்துள்ள கலைஞர்கள் புதிதாக விண்ணப்பிக்க வேண்டியது இல்லை.

## பொங்கல் திருநாள் வாழ்த்து !



'இயலிசை' அன்பர்கள், ஆதரவாளர்கள், விளம்பர தாரர்கள், மற்றும் வாசக நேயர்கள் அனைவர்க்கும் பொங்கல் திருநாள் நல் வாழ்த்துக்கள்.

— சிதம்பரம்
எஸ். மீனாட்சிசுந்தரம்
சிறப்பாசிரியர்.

## இசையரசு தண்டபாணி தேசிகர் நீண்ட இசைத்தட்டு

### 'இன்ரிக்கோ' வெளியீடு



இன்ரிக்கோ இசைத்தட்டு நிறுவனத்தார் சமீபத்தில் 'திருமழிசை ஆழ்வார்' என்று நீண்ட இசைத் தட்டினை வெளியிட்டுள்ளனர். அதில் காலஞ்சென்ற பாபநாசம் சிவன் எழுதிய 12 வைணவப் பாடல்கள் அடங்கியுள்ளன. இதில் 9 பாடல்களை காலஞ்சென்ற இசையரசு M. M. தண்டபாணிதேசிகர் பாடியுள்ளனர். இதர பாடல்களை P. லீலா மற்றும் சிலர் பாடியுள்ளனர். S. V. வெங்கட்ராமன் இசை அமைத்துள்ளார். இவைகள் 'திருமழிசை ஆழ்வார்' என்ற திரைப்படத்திற்காக பதிவு செய்யப்பட்டு இதுவரை வெளியிடாமல் இருந்தவை. இன்ரிக்கோ நிறுவனத்தார் முயற்சியில் பாடல்கள் வெளிவந்துள்ளன. படமும் இதுவரை வெளிவரவில்லை. பாடல்கள் நன்றாக உள்ளன.

## V.G.P. விந்தை உலகத்தில்

## தினசரி கலை நிகழ்ச்சிகள்

### அண்ணாச்சி பன்னீர்தாஸ் அறிவிப்பு

சென்னை திருவான்மையூர் அருகே உள்ள V.G.P. தங்கக் கடற்கரை எதிரில் V.G.P. வர்த்தகக் கலை கிராமத்தை உருவாக்கிக் கொண்டுவரும் V.G.P. வர்த்தக சகோதரர்கள் தற்பொழுது V.G.P. அதிசய உலகம் ஒன்றினையும் உருவாக்கதிட்டமிட்டுள்ளனர்.

இவ்வுலகத்தை சென்னையின் வடக்கில் உள்ள எண்ணூர் அருகில் உள்ள 1000 ஏக்கர் கொண்ட தீவு ஒன்றில் அமைக்க உள்ளனர். இது அமெரிக்காவில் உள்ள வால்ட் டிஸ்னி விந்தை உலகத்தை போல் பல அம்சங்களும் நிறைந்ததாக இருக்கும். இந்தியாவிலேயே இதுதான் முதல் முயற்சியாகும். குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை எல்லோரும் கண்டு ரசித்து மகிழ்வதோடு அறிவு வளர்ச்சிக்கும் இது பயனுள்ளதாக இருக்கும். நாட்டின் ஏற்றுமதி வளர்ச்சிக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் இது உதவும்.

இதில் நல்ல கலை அரங்கங்களும் கட்டப்பட்டு தினசரி வெளிநாட்டினரையும் கவரத்தக்க வகையில் இசை நாட்டிய நிகழ்ச்சிகளை நடத்த உள்ளனர்.

மேற்கண்ட தகவல்களைதொழில் அதிபர் V. G. பன்னீர்தாசு 1-1-84 அன்று நடந்த பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் தெரிவித்தார். தவிர இவ்வாண்டு எழுத்தாளர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், பத்திரிகையாளர்கள் உட்பட 25 பெயர்கள் அறிவித்து அவர்களுக்கு தமிழ் புத்தாண்டு தினத்தில் ரூ, 1000 பரிசு வழங்கப்படும் என்றார். சிறந்த நூலுக்கு ரூ. 5001 பரிசும் அன்று வழங்கப்படும் என்றார்.

வளர்க அவர்கள் தொண்டு !

<u>குடியரசு நாளில்</u>

## சென்னையில் திருப்புகழ் விழா



சென்னைபூக்கடை கேசவமல்லீஸ்வரர்ஆலய அநுபூதி மண்டபத்தில் 26-1-84 வியாழன் காலை 4-30 மணி முதல் இரவு 12 மணிவரை அடியார் திருக்கூட்ட இறைபணி மன்றம் தங்கள் 27-வது ஆண்டு திருப்புகழ் தொடர் இசையரங்கம் நடத்த உள்ளனர். காலையில் அருணகிரிநாதருக்கு P. G. கதிர்வேலு நாதசுர இசையுடன் அபிசேகம். திருக்கூட்ட திருப்புகழ் பஜனை நடைபெறும்.

தொடர் இசையரங்கத்தில் காலையில் கீழ்கண்ட இசைவாணர்கள் கலந்துகொள்வர். திரு. முத்து கிருஷ்ணன், S. கிருஷ்ணமூர்த்தி. M. P. ஜெயராமன், S. பாலசுப்ரமணியம், ஸ்ரீ ரங்கம் T.R. கண்ணன், கோவிந்தராஜுபிள்ளை, திருமதிகள் ஜெயமாதங்கி விசுவநாதன். பவானி அம்மாள். G. சரஸ்வதி, ராதா கிருஷ்ணமூர்த்தி (சங்கீதாலயம், அண்ணாநகர்)

பிற்பகல் முதல் கிருத்திகா பஜனை மண்டலி. புரசை E. அருணகிரி. காஞ்சிபுரம் விநாயகம் & புண்யகோடி, சைதை நடராசன் பாலசுந்தரம். லால்குடி M. சுவாமிநாதன். குடந்தை லட்சுமணன் & தருமபுரம் ஞானபிரகாசம், தருமபுரம் P. சுவாமிநாதன். திருமதி & திரு. பித்துக்குளி முருகதாசு ஆகியோர் பாடுவர்.

விழா ஏற்பாடுகளை டாக்டர் P. S. C. மணிவிரிவாகச் செய்துள்ளார்.

## 'நாதோபாசனா'

(சீனுவாச சாஸ்திரி கூடம், மயிலை, சென்னை-4)

**15-1-84** ஞாயிறு மாலை 6 மணி
அய்யலூர் கிருஷ்ணன் பாட்டு
Prof. T. N. கிருஷ்ணன் பிடில்
காரைக்குடி கிருஷ்ணமூர்த்தி மிருதங்கம்
V. நாகராசன் கஞ்சிரா

**5-2-84** ஞாயிறு மாலை 6 மணி
T. V. சங்கர நாராயணன் பாட்டு
M. சந்திரசேகரன் பிடில்
T. K. மூர்த்தி மிருதங்கம்

## மாதங்கியின் மகத்தான ஆரம்பம்

சம்பிரதாய முறையில் கச்சேரிகளை ரசிகப்பெருமக்களுக்கு இலவசமாக வழங்கும் நோக்குடன் சென்னையில் வயலின் கலைஞர் V.V. சுப்பிரமணியம் அவர்கள் 'மாதங்கி' என்ற இசைச்சபையினைத் துவக்கியுள்ளார். இதன் துவக்கவிழா 9-12-83 அன்று டாக்டர் செம்மங்குடி சீனுவாச அய்யர் தலைமையில் மயிலை சீனுவாச சாஸ்திரி கூடத்தில் நடைபெற்றது 18-12-83 வரை தினசரி கச்சேரிகள் நடந்தன.

V.சுப்ரமணியம், P. S. நாராயணசாமி. யோகம் சந்தானம், பம்பாய் சகோதரிகள், வைரமங்கலம் லட்சுமி நாராயணன், மதுரை G.S. மணி, T.V. சங்கர நாராயணன், D.K. ஜெயராமன், T.M. தியாகராசன், ஸ்ரீரங்கம் V.S. கிருஷ்ணமூர்த்தி, T.K. கோவிந்தராவ், நேதனூரி கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

### தென்னாற்காடு மாவட்ட

## நாதசுரக்காரர்கள் கூட்டம்

தென்னாற்காடு மாவட்ட நாதசுர தவில் இசைக்கலைஞர்கள் சங்க பொதுக்கூட்டம் புத்தாண்டு தினத்தன்று பண்ருட்டியில் நடைபெற்றது. மாவட்டத் தலைவர் கடலூர் M.R. பெருமாள் தலைமை வகித்தார். திருக்குறள் பேரவைச் செயலர் மு. கலிய பெருமாள், இந்து சமுதாய எழுச்சி இயக்க செயலாளர் K.K. சீனுவாசன் ஆகியோர் சிறப்புரை வழங்கினர் நாதசுர கலைஞர்கள் T.K. வேணு பிள்ளை, வளவனூர் V. அருணாசலம், கள்ளக்குறிச்சி M.S. இராமையா பிள்ளை, பண்ருட்டி G. சின்னையன், திருக்கண்டேசுவரம் T.K. ரங்கநாதன் மற்றும் ஏராள நாதசுர தவில் கலைஞர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டனர். கூட்ட ஏற்பாடுகளை மாவட்ட செயலாளர் பெரிய கள்ளிப்பட்டு N. இராமு செய்திருந்தார்.

## வழுவூரார் நடன விழா



குமாரி ஜெயந்தி ராசகோபால்

சென்னை மயிலையில் உள்ள வழுவூரார் பரதநாட்டிய கலா நிலையம் மயிலை ரசிக ரஞ்சனி சபையில் இசை விழா பருவத்தில் 24-12-83 முதல் 1-1-84 வரை நடனக்கலை விழா நடத்தியது. விழாவினை இசைச் சித்தர் சிதம்பரம் S. ஜெயராமன் தலைமையில் தமிழக அரசு சட்ட சபைத் தலைவர் திரு K. ராசாராம் துவக்கிவைத்தார். கலாநிலைய மாணவிகள் மற்றும் பல நடனக் கலைஞர்கள் தினசரி தரமான நடன நிகழ்ச்சிகளை நடத்தினர்.

இவ்விழாவில் இசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. கோட்டூர் ராசரத்தினம் சகோதரர்கள், திருமீயச்சூர் T.K.S. சகோதரர்கள், மதுரை M.P.N. சகோதரர்கள், வலங்கைமான் சௌந்தராசன் ஆகியோர் நாதசுர நிகழ்ச்சிகள் தவில் கலைஞர்களுடன் நடத்தினர். ராஜ்குமார் பாரதி, T.N. சேஷகோபாலன், திருமதி சரசுவதி, பம்பாய் சகோதரிகள், T K.S. கலைவபணன். டாக்டர் M.L. வஸந்தகுமாரி இவர்கள் இசை நிகழ்ச்சிகள், மாஸ்டர் சீனுவாசன்-மாண்டலின், சிட்டிபாபு-வீணை, டாக்டர் N. ரமணி-புல்லாங்குழல் ஆகிய கலை நிகழ்ச்சிகளும் நடைப்பெற்றன. நிகழ்ச்சிகளுக்கு கட்டணம் இல்லை. தினசரி ஏராள ரசிகர்கள் வந்து இரவு வரை இருந்து நிகழ்ச்சிகளை ரசித்தனர். விழா ஏற்பாடுகளை நடன ஆசிரியர் வழுவூர் R சாம்ராஜ் சிறப்பாகச் செய்திருந்தார்.

### கிருஷ்ணகானசபை, நடனவிழா

கடந்த டிசம்பர் 83 மாதம் பெரும் கலைவிழாவினையும் நாட்டிய மாநாட்டினையும் நடத்திய சென்னை தி.நகரில் உள்ள கிருஷ்ண கான சபை 11-1-84 முதல் 18-11-84 வரை பொங்கல் நடன விழாவினையும் நடத்துகின்றது, இதில் தினசரி பரத நாட்டிய குச்சிபுடி நடனமணிகள் கலந்து நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர்.

### நிருத்யரங்கா நடனகலை விழா

சென்னை மயிலை ரசிக ரஞ்சனி சபையில் 21-1-84 முதல் 7-2-84 வரை மந்தவெளியில் உள்ள நிருத்யரங்கா என்ற அமைப்பு நடனகலை விழாவினை நடத்த உள்ளது. அதில் தினசரி பல பிரபல நடனக் கலைஞர்கள் கலந்து நடனமாட உள்ளனர்.

## வீணை S. பாலசந்தர் போராட்டம் வெற்றி பெறுமா ?



தமிழகத்தில் இசைக்கலை என்றுமே சிறந்து விளங்கியது. குறிப்பாக தஞ்சை மாவட்டம் கலைகளின் கேந்திரமாக விளங்கியது. தமிழிசை மொழி மாற்றத்துடன் கர்நாடக இசையாக வளர்ந்து அண்டை மாநிலங்களுக்கும் பரவியது. தஞ்சை மாவட்டத்தில் தியாகராஜர், முத்துசுவாமி தீட்சதர், சியாமா சாஸ்திரிகள் என மூன்று இசைப் பெரியார்கள் தோன்றினர். இவர்கள் தெலுங்கிலும், சமஸ்கிருதத்திலும் ஏரான கீர்த்தனங்கள் (பாடல்கள்) பாடி கர்நாடக இசையை வளர்த்தனர்.

கேரளத்தில் ஆட்சி செய்துவந்த ஸ்வாதித்திருநாள் மகாராஜா அங்கு இசைக்கலையை வளர்க்க விரும்பினார். அப்போது தஞ்சை சரபோஜி மன்னரின் ஆதரவில் இருந்த 'தஞ்சை நால்வர்' எனப்படும் பெரும் கலைஞர்களில் பொன்னையா, சின்னையா, சிவானந்தம், வடிவேலு சகோதரர்கள் ஏதோ மனவருத்தம் காரணமாக தஞ்சாவூரை விட்டு செல்ல விரும்பினர். அவர்களை திருவனந்தபுரம் அழைத்து தனது அரசவைக் கலைஞராக வைத்துக்கொண்டார் ஸ்வாதி திருநாள் மகாராஜா. இவர்கள் வந்த பிறகு கேரளத்தில் நாட்டியக் கலையும் இசைக்கலையும் வளர்ந்தன. அதில் வடிவேலு என்பவர் பாடல்கள் பல பாடினார். அதற்கான ஆதாரங்களை-ஓலைச் சுவடிகளை இன்றும் அவரது பரம்பரையைச் சார்ந்த வீணை K. P. சிவானந்தம் அவர்களிடம் உள்ளது. அப்பாடல்களை அரச முத்திரையோடு பரப்பினார்கள் இது தவிர இராமவர்மன் தம்பி, மேரு சுவாமி போன்றோர்கள் கீர்த்தனங்களையும் இவ்வாறு பரப்பினார். பின்வந்த முத்தையா பாகவதர் சில பாடல்களையும் சுவாதித்திருநாள் கீர்த்தனங்கள் என்றனர்.

ஆக சுவாதித்திருநாள் இன்று அவர் பெயரில் இருக்கும் கீர்த்தனைகளில் சிலவற்றை மட்டும் மற்ற கலைஞர்கள் துணையோடு இயற்றியிருக்கலாமே தவிர அனைத்தும் அவரே இயற்றியதில்லை. அவ்வாறு இருக்கும்பொழுது மும்மூர்த்திகளுக்கு இணையாக அவரைச் சொல்வது சரியாகுமா ? இது பெரிய இடத்து விவகாரமாதலால் எந்தக்கலைஞரும்மறுத்துக்கூறவில்லை

1940-ல் சென்னையிலுள்ள மியூசிக் அகடமியில் ஏதோ சிலர் திட்டமிட்டு-கேரளத்தவரை திருப்திபடுத்தும் வகையில்-சங்கீத மும்மூர்த்திகள் படத்துடன் சுவாதி திருநாள் மகாராஜா படத்தையும் சரிசமமாக வைத்துவிட்டனர்.

இதனையும் பல ஆண்டுகளாக எந்த கலைஞனோ ரசிகனோ எதிர்ப்பு தெரிவிக்காமல் இருந்தான். அகடமி விரோதம் வேண்டாம் என்று எண்ணியிருக்கலாம். அகடமியாருக்கும் வீணை மேதை S. பாலசந்தருக்கும் சில ஆண்டுகளாக வேற்றுமை வளர்ந்து வந்தது.

அகடமியில் நடந்த மேற்கண்ட தவறினைச் சுட்டிகாட்டி அங்குமூவர் படத்துடன் சரிசமமாக மகாராஜா படத்தை வைக்ககூடாது என்று S. பாலசந்தர் சென்ற ஆண்டிலிருந்து வற்புறுத்தி வருகின்றார்.

அவரது போராட்டம் அகடமியாருக்கு அதிர்ச்சி கொடுத்திருப்பது தெரிகின்றது. இல்லையென்றல் பல ஆண்டுகளாக இல்லாத அகடமி அழைப்பு பாலசந்தருக்கு இவ்வாண்டு வீடு தேடி சென்றிருக்குமா ?

இந்த அழைப்பிற்கு பிறகு அவர் தனது போராட்டத்தை விட்டு விடுவார் என சில சங்கீத கலைஞர்கள் எண்ணுகின்றனர்.

---

**சென்னையில்**

## மார்கழி முழுவதும் தமிழிசையரங்கு !

### தெய்வத் தமிழ் மன்றம் ஏற்பாடு

சென்னை பழைய வண்ணாரபேட்டையில் இயங்கி வருவது தெய்வத்தமிழ் மன்றம். மார்கழி மாதம் 16-12-83 முதல் 13-1-84 வரை தினசரி காலை 6 மணிக்கு பல தமிழிசைவாணர்கள், சொற்பொழிவாளர்களை வைத்து பழைய வண்ணாரப்பேட்டை கோதண்டராமர் திருக்கோயில் மண்டபத்தில் நிகழ்ச்சிகள் நடத்தினர், இதனை முதல் நாள் ஆற்றலரசு K. ஆறுமுகசாமி தலைமையில், தொழிலதிபர் P. M. பிச்சை செட்டியார் திருவிளக்கு ஏற்ற திருக்குறள் வி. சங்கரன் செட்டியார் துவக்கி வைத்தார். நிகழ்ச்சிகள் ஏற்பாடுகளை மன்றத் தலைவர் பி. வெங்கடேசன். செயலர் R. இராசேந்திரன். ஆகியோர் செய்தனர்.

---

## தமிழிசைச் சங்கம் Regd காரைக்குடி

### 17-வது ஆண்டு இசைப்போட்டி விழா

காரைக்குடி தமிழிசைச் சங்கம் 17-வது ஆண்டு இசைப் போட்டி விழா 19-2-84 ஞாயிறன்று டாக்டர் அழகப்பச் செட்டியார் பயிற்சிக் கல்லூரி மாதிரி மேல்நிலைப் பள்ளியில் நடைபெறவிருக்கிறது. கர்நாடக இசைப்பிரிவில் வாய்ப்பாட்டு, வீணை, வயலின், மிருதங்கம் ஆகிய பிரிவுகளிலும் பரதநாட்டியப் பிரிவிலும் போட்டிகள் நடத்தப்படும். போட்டிகளில் பங்கு கொள்பவர்கள் அனைவர்க்கும் மதிய உணவு, மாலை காபி போட்டி நடைபெறும் நாளன்று இலவசமாக அளிக்கப்படும்.
மனுக்கள் அனுப்பவேண்டிய கடைசிநாள் 31-1-1984
மனுக்கள் விதிமுறைகள் கிடைக்கும் இடம் :-

முகவரி:- **T. V. S. மணியன்**
தலைவர், இசைப்போட்டிக் குழு,
தமிழிசைச் சங்கம்,
சுப்ரமணியபுரம் 4-வது வீதி,
காரைக்குடி-623 002.

மு. கு:. போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு வெள்ளி லோகத்தால் அலங்கரிக்கப்பட்ட கேடயங்கள் அளிக்கப்படும்.

---

## சங்கீத மூர்த்திகள் மூவரே !

சென்னை மண்ணடியில் 16-12-83 அன்று சங்கீத மும்மூர்த்திகள் சபையின் 5-ம் ஆண்டு விழா, T. R. ரமேஷ் M.A., B.L. அவர்கள் முன்னிலையில் நடைபெற்றது. விழா U.E. பழனிவேலு-V. பஞ்சாட்சரம் இவர்கள் நாதசுர இசையோடு ஆரம்பித்தது. மலைவையாபூர் சித்தாபதி மும்மூர்த்திகளைப்பற்றி பேசினார். பின்னர் டாக்டர் பிரபஞ்சம் சீதாராம் குழுவினர் புல்லாங்குழல் கச்சேரி செய்தனர். இரவு நடந்த வீதி உற்சவத்தில் திருவாளப்புத்தூர் T. K. வேணுபிள்ளை, T.A. சீனுவாசன் நாதசுரம் வாசித்தனர். விஜயவாடா M. கண்ணுராவ் (திருப்பதி கல்லூரி ஆசிரியர்) கோவிலூர் K. V. பழனிவேலு, திருப்பத்தூர் T. C. பழநி ஆகியோர் சிறப்புத்தவில்கள் வாசித்தனர்.

விழாவிற்கு தலைமை வகித்து பேசும்பொழுது சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் தமிழிசை மூர்த்திகளும் மூவரே, கர்நாடக இசை மூர்த்திகளும் மூவரே, இவர்களுக்கு இணையாக சிலரை வைக்க முயல்வது தவறு என்றார். விழா ஏற்பாடுகளை தவில் கலைஞர்கள் M. S. சுந்தரேசய்யர், V.N. வேலாயுதம் மற்றும் M. K. சுப்பிரமணிய அய்யர். M. S. பிரபாகர் இவர்கள் செய்திருந்தனர்.

ஞான திருவாளபுத்தூர் T. K. வேணுப்பிள்ளை நாதசுரக்கச்சேரிக்கு தமிழக அரசவைக் கலைஞர்கள் அரித்துவாரமங்கலம் பழனிவேல், திருவாளப்புத்தூர் கலியமூர்த்தி தனித் தவில்கள் வாசித்தனர். விழாவில் நகர மன்ற முன்னாள் தலைவர் K. M. கோவிந்தராசனார், டாக்டர் D. குலசேகரன் M.B., B.S., ஆரணி ஸ்ரீலட்சுமி சரசுவதி நூற்பாலை இயக்குநர் R. ஸ்ரீஹரி M.A., ஸ்ரீ லட்சுமி சரசுவதி மோட்டார் சர்வீசு R. பரந்தாமன் B. Sc., ஆகியோர் கலந்து வாழ்த்துரை வழங்கினர்; விழா ஏற்பாடுகளை தலைவர் N. சீராமன், கடம் D.C. அருணகிரி, V. முனுசாமி ரெட்டியார், தவுல் T.V. ராஜேந்திரன், V.R. மாயகேசவம். S. V. சண்முகம் ஆகியோர் செய்திருந்தனர்.

---

### குடியாத்தம் உற்சவம்

குடியாத்தம் இசைக் கலைஞர்கள் சங்கம் சங்கீத மும்மூர்த்திகள் ஒன்பதாம் ஆண்டு ஆராதனை விழாவினை 12-1-84 அன்று சிறப்பாக நடத்தினர். வேலூர் V. P. நடராசன் குமாரர்கள் கிளாரினட் இசையும் இரவு ஆலப்புழை திருமலை திருப்பதி ஆலயங்கள் கலை

---

### வாழ்த்திடும் கடிதங்கள் !

தாங்கள் அனுப்பிய இசைவிழா சிறப்பு இதழ் கண்டேன். பத்திரிக்கை சிறப்பாக அமைந்துள்ளது. இசைத்துறைக்கு தனியாக ஒரு தமிழ் பத்திரிக்கை இல்லையே என்ற குறை இதன் மூலமாக இசைப்பிரியர்களுக்கு தீர்ந்துவிடும் என்று நினைக்கின்றேன்.

அரசவைக் கலைஞர், கலைமாமணி
**V. கோவிந்தசாமி நாயக்கர்,**
பிடில் கலைஞர்

---

சங்கீதத்துறையில் உள்ள
சகலர்க்கும் உரிய இந்த
இங்கித ஏட்டைக் காப்போம்
இருந்தமிழ் இசைத்துறைக்கே
பொங்கிடும் ஆர்வத்தோடு
பொதுக்குரல் எழுப்புகின்ற
மங்கல ஏடாம் இந்த
மாணிக்க இதழ்தான் வாழி !

கவியரசு டாக்டர் **இளங்கம்பன்,**
சித்ரகூடம், பழநி.



N/MS(S)/260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art printers. Kavarai Street, Vadapalani Madras-26. Published & Edited by M. Lakshmi. 57. South Sivan Koil Street. Kodambakkam. MADRAS 600 024.

கலைத் தொடர்கதை

# [illegible]

## 12. பாகவதர் பாடம்

இன்றைக்கு இசையாசிரியர்கள் வெளிப்படையாக எல்லாவற்றையும் கற்றுக்கொடுப்பது போல் அன்று கற்றுத்தரமாட்டார்கள். பெரும்பாலும் குருகுலவாசம் செய்து தான் வித்தையை கற்றுக்கொள்ள வேண்டும். குரு வீட்டு வேலைகள் ஏராளமாக செய்ய வேண்டியிருக்கும். இந்த நேரத்தில் தான் பாடம் என்று இருந்தாலும், அந்த நேரத்தில் நடைபெறும் பாடத்தை விட வேறு சமயங்களில் குரு தன்னை மறந்து பாடி, உணர்ச்சி வசப்பட்டு சொல்லும் பொழுதுதான் பெரிய கருத்துக்கள், பாடங்கள் கிடைக்கும்.

திருவையாறு ராஜகோபால் பாகவதரிடம் எப்படி நடக்கலாம் என்பதை சீடன் சுவாமிநாதன் நன்கு அறிந்திருந்தான். அவருக்கு கனபோதை ஏறிவிட்டால் ஞானமும் ஏறிவிடும். தன்னை மறந்து பாட ஆரம்பித்துவிடுவார். சுவாமிநாதன் பாடமாக்கிக் கொள்வான். சுவாமிநாதனுக்கு ஓர் தனி திறமை இருந்தது. அதாவது அவன் பழகும் வித்வான்களிடம் அவர்களையறியாமலேயே பல விஷயங்களை தெரிந்துகொள்வான்.

இதற்கு ஒரு வேடிக்கையான உதாரணம் கூட உண்டு. இரண்டு யோகிகள் சந்தித்துக்கொண்டால் நேருக்கு நேர் உட்கார்ந்து பேசமாட்டார்களாம். எதிரில் யோகிகளுக்கு தனக்கு நேரே அமர்ந்திருப்பவர் தவ பலனை, ஆத்ம பலத்தை அறிந்து கொண்டும் இழுத்து கொள்ளும் ஆற்றல் உண்டாம். எனவே ஒருவரை ஒருவர் மதிப்பாக வணங்கிக் கொண்டாலும், வாழ்த்திக்கொண்டாலும் மிக கவனமாக பழகிக் கொள்வார்கள். இந்த வித்தையில் சுவாமிநாதனுக்கு பாதி கைவரப்பெற்றது. அவன் எந்த வித்வானிடம் சிறிது நாள் பழகினாலும் போதும் அவனது ஆற்றலில் பெரும் பங்கை கிரகித்து விடுவான். ஆகையால் சீடர்கள் குருவினிடமும் தந்திரமாகத்தான் கலையைக் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது.

இன்னொரு யுக்தியும் சுவாமிநாதன் செய்வான். குருவினிடம் தானே நேரடியாக எந்த விளக்கமும் கேட்கமாட்டான். பிற மாணவர்களை விட்டு கேட்கச் செய்வான். அல்லது வேறு வித்வான் இவ்வாறு பாடினார் - அவ்வாறு பாடினார் என்பான். அதைப்பற்றி குரு விளக்கம் சொல்லும்பொழுது தனது ஐயத்தினைத் தானே தெளிந்து கொள்வான்.

ராஜகோபால் பாகவதருக்கு நீண்டநாள் சீடன் கல்யாணம். குடவாசல் என்ற ஊரில் உள்ள பெரிய தனவந்தர் மகன். அவருக்கு மகன் பாட்டு கற்றுக்கொண்டு பாடவேண்டும் என்று ஆசை. அதற்கு மற்றொரு காரணமும் இருந்தது. கல்யாணம் ஆணாகப் பிறந்திருந்தாலும் பெண் சாயலைப்பெற்றிருந்தான் (உருவம் நடை, பாவம் எல்லாவற்றிலும்) அவனை சிறுவயது முதலே இதர பிள்ளைகள் கேலி செய்து வந்தனர். அதனால் அவன் பள்ளிக்கூடமும் செல்லவில்லை. வீடு, நில காரியங்களையும் நிர்வகிக்க திறமையில்லை. பாட்டாவது கற்றுக் கொள்ளட்டும் என்று ராஜகோபால் பாகவதரிடம் அனுப்பிவைத்தார். அவனும் அவரிடம் மதிப்புடன், இசை கற்கும் ஆர்வத்துடன் இருந்தான். அவரது மனைவிக்கு வேண்டிய சகல வேலைகளும் கல்யாணம் தான் செய்வான். குரு பத்தினிக்கும் இவன்மீது தனி அன்பு உண்டு. ஆனால் வித்தைதான் அவனிடம் வர முரண்டு பிடித்து நின்றது. பாகவதருக்கு குடவாசலார் மாதந்தோறும் வசதியாக அனுப்பிவைத்துவிடுவார். கல்யாணம் பாகவதரிடம் மிகவும் எதார்த்தமாகப் பழகுவான். பாகவதரும் அவனிடம் சற்றும் கடிந்து கொள்ளமாட்டார். எனவே அவன் மூலம் இடக்கான கேள்விகளையும் சுவாமிநாதன் பாகவதரிடம் கேட்டு விடுவான்.

சுவாமிநாதன் காலையில் கொடுத்த காணிக்கையில் மகிழ்ச்சியாகி பாகவதர் பாட ஆரம்பித்தார். தேவகாந்தாரி ராகத்தில் தியாகராஜசுவாமிகள் பாடிய 'க்ஷீர சாகர' என்ற கீர்த்தனையைப் பாடினார். அந்த கீர்த்தனையை அப்படியே சீடர்கள் தங்கள் மனதில் பதிவு செய்து கொண்டிருந்தனர். அதில் சரணத்தில் வரும் 'தாரக நாமா' என்று பாடும்பொழுது அவர் வணங்கும் இராமபிரானே நேரில் வந்ததுபோல கை கூப்பி வணங்கினார். சீடர்களும் உணர்ச்சி வசப்பட்டு குருவினைக் கும்பிட்டனர். பின்னர் சுவாமிநாதனைப்பார்த்து 'கொஞ்சம் ஸ்வரம் பாடுடா' என்றார்.

'எந்த இடத்தில் பாடவேண்டும்' என்று கேட்டான் சுவாமிநாதன்.

'எம்பெருமான் திரௌபதிக்கு சேலை கொடுத்து மானத்தைக் காப்பாற்றினாரே அந்த இடத்தில் தான்...' என்றார் பாகவதர்.

பாகவதர் பொருளோடு கீர்த்தனங்களைக் கற்றுக் கொடுப்பதில் வல்லவர் எனவே அந்த இடம் எது என மாணவர்கள் அறிந்திருந்ததால் சரணத்தின் முதலடி 'தானி மணிக்கு சிரலிஞ்சி' என்ற அடியை எடுத்துக் கொண்டு சுவாமிநாதன் இரண்டு ஆவர்த்தனம் ஸ்வரம் பாடினான்.

சாதாரணமாக தேவகாந்தாரி ராகத்தைப் பாடுவதும், அதற்கு ஸ்வரம் பாடுவதும் கடினமே-சுவாமிநாதன் சரளமாகப்பாடியதைக்கேட்ட பாகவதருக்கு வியப்பு பெருகியது. 'மேளக்காரர் சுந்தரம் பிள்ளை மவனுச்சே சொல்லியா தரணும்' என்று புகழ்ந்து விட்டு தானும் இரண்டு ஆவர்த்தனம் பாடி நிறைவு செய்தார்.

பின்னர் சாமிநாதா சங்கராபரணம் ராகம் கொஞ்சம் பாடு' என்றார். சாமிநாதன் தன் இனிய குரலில் சங்கராபரணத்தை அலசினான். பாகவதர் 'பேஷ் ... பலே...'' என்று சொல்லி அவனைப் பாராட்டி விட்டு 'இன்றைக்கு புது கீர்த்தனம் பாடுகின்றேன். கவனமாகக் கேட்டுக் கொள்ளணும்' என்றார் பின் தனது பெரிய குரலில் சங்கராபரணத்தில் 'ப்ராண நாத' என்ற கீர்த்தனையை மத்திம காலத்தில் எடுத்தார். பல்லவி மட்டும் பாடி விட்டு மாணவர்களைப் பார்த்து 'ஒன்று கவனித்தீர்களா' என்று கேட்டார். மாணவர்கள் அனைவரும் புரியாது மௌனமாக இருந்தனர்.

பாகவதர் சிரித்துக்கொண்டார். ''க்ஷீரசாகரா' விளம்ப காலம் கீர்த்தனம். அதனைப் பாடி விட்டு மீண்டும் மெதுவாக ஒன்று பாடினால் எடுப்பாக இராது அதனால் தான் மத்திம காலத்திலும் சற்று மிடுக்கான கீர்த்தனை பாடுகின்றேன்'' என்றார். இதற்குள் சுவாமிநாதன் தன் பக்கத்தில் இருந்த கல்யாணத்தை சீண்ட அவன் ஒரு சந்தேகத்தைக் கிளப்பினான்.

''சுவாமி இந்த கீர்த்தனையை 'சூலினி' இராகத்தில் சாஸ்திரிகள் பாடினாங்க சரியா...'' என்று கேட்டான் கல்யாணம். சாஸ்திரி என்று குறிப்பிட்ட ராமசாமி சாஸ்திரிகள் கொஞ்சம் பிரபலமாகக் கச்சேரிகள் செய்து கொண்டிருப்பவர்.

இதனைக் கேட்டதும் பாகவதருக்கு கடுங்கோபம் உண்டானது. தானகப்பிரமத்தைவைத்து பிழைப்பு நடத்துறவு போக அபசாரம் வேறு செய்கிறானுங்க... என்று கூறி நீண்ட விளக்கம் தரலானார்.

(தொடரும்)



## ரமணியின் புல்லாங்குழல் கழக முதல் ஆண்டு விழா

டாக்டர் N. ரமணி, புல்லாங்குழல் கலைஞர் நடத்தும் புல்லாங்குழல் கழகத்தின் RAMANI'S Academy of flute முதல் ஆண்டு விழா 3-1-84 அன்று சென்னை மயிலை பைன் ஆர்ட்ஸ் கிளப் அரங்கத்தில் நடைபெற்றது. தமிழக அரசு உள்துறைச் செயலாளர் T.V. வெங்கட்ராமன் தலைமை வகித்தார். விழாவில் புல்லாங்குழல் கலைஞர் K.R. கணபதி பாராட்டு பெற்றார். புல்லாங்குழல் கழக மாணவர்கள் புல்லாங்குழல் இசை நிகழ்ச்சிகளை நடத்தினர்.